ரூ. 5.00

தமிழ் ஆண்டு 2040
பங்குனி - மார்ச்சு 2009





# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்

## 13-2-2009-இல் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேரவைச் செம்மல் விருது பெறும் சிறப்பாசிரியர்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |


சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆதீன இணையதள முகவரி :

website : www.kundrakudiadheenam.org.

ஆசிரியர்

**மரு. பரமகுரு**



அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்


| | | | |
|---|---|---|---|
| தமிழ்ஆண்டு 2040 | | மாதம் : | பங்குனி |
| மலர் : 24 | | இதழ் : | 3 |




## காந்தி தேசத்தை உருவாக்குவோம்!

உலகமே இந்தியாவை உற்று நோக்கவைத்த நிகழ்வுகளில்! ஒன்று, மகாத்மா காந்தி அடிகள் பயன்படுத்திய பொருள்கள் ஏலம் போனபொழுது இந்தியத் தொழிலதிபர் உயர்திரு விஜய்மல்லையா அவர்கள் சுமார் 9 கோடி மதிப்பில் ஏலம் எடுத்து இந்தியத் தந்தையின் பொருள்களையும், நினைவுகளையும் இந்தியாவுக்கு மீட்டு வந்தது பாராட்டுக்குரியது ஆகும்.

உலகின் தலைசிறந்த ஆஸ்கர் விருதுகள் இரண்டை இந்தியத் திரைப்பட இசை அமைப்பாளர் நமது தமிழர் ஏ.ஆர். ரகுமான் அவர்கள் ஒரே நேரத்தில் பெற்று இந்தியாவுக்கு, இசைத்துறைக்குப் பெருமை தேடித் தந்திருக்கின்றார். எல்லாப் பெருமைகளையும், புகழையும் இறைவனுக்கு சமர்ப்பணம் செய்த அந்த மகத்தான இசைக்கலைஞன் இந்தியர்கள் எல்லோரின் பெருமைக்கும், பாராட்டுக்கும் உரியவர்; மும்பை மாநகரத்தினை மையப்படுத்தி எடுக்கப்பட்ட ஸ்லாம் டாக் மில்லியனர் (Slum dog millionaire) என்ற ஆங்கிலத் திரைப்படம் தான் ஏ.ஆர்.ரகுமான் பெற்ற இரண்டு விருதுகளோடு எட்டு விருதுகளைப் பெற்றுள்ளது.

குப்பத்து இளைஞன் கோடீசுவரன் ஆனது கதையின் மையக் கரு. மும்பை மாநகரம் இந்திய நிதியின் பங்குச்சந்தை

மூலதனத்தின் தலைநகரம். வானளாவிய அடுக்குமாடிகள்! நீலக் கடற்பரப்பின் அழகிற்கு அணி சேர்க்கும், வைர நெக்லஸ் பகுதி. பயங்கரவாதம் தடையின்றி நுழைந்த கம்பீரமான இந்திய நுழைவாயில், நுழைவாயிலில் பழமையும், பெருமையும், ஆடம்பரமும் நிறைந்த நட்சத்திர விடுதிகள். இவை மட்டும் அல்ல மும்பை! கண்ணோடு இமை சேர்ந்திருப்பது போல, சதையும், நகமும் இணைந்திருப்பது போல வானளாவிய அடுக்கு மாளிகைககளின், அருகே குடிசைகள், குப்பங்கள், குப்பைகளின் மேடுகள்! மும்பை மாநகரத்தின் மக்கள் தொகை சுமார் 1 கோடி 20 லட்சம் பேர் என்றால் அதில் சரிபாதி 65 லட்சம் பேர் குடிசைகளில், குப்பங்களில் வசிக்கின்றார்கள். குடிநீர், மின்சாரம், சாக்கடை, கழிப்பறை வசதி இன்றிக் குடிசைகளில் சுமார் அரைக் கோடி மக்கள்! நீண்ட சாலைகளின் ஓரங்களில் அழுக்குத் துணி பந்தல் அமைத்துப் பல்லாயிரக்கணக்கில் மக்கள் வசிக்கின்றார்கள்.

மும்பை மாநகரத்தின் இந்த முரண்பாடு இந்தியப் பொருளாதாரத்தின் கேள்விக்குறியாக நீள்கின்றது. "ஸ்லம் டாக் மில்லியனர்" என்ற ஆங்கிலத் திரைப்படத்தின் மூலம் இந்தியாவின் ஏழ்மை படம் பிடித்துக் காட்டப்படுகின்றது என்று சிலர் வேதனையும் வெட்கமும் அடைந்தார்கள். குடி அரசாய் பிரகடனப்படுத்தப்பட்டு அறுபது ஆண்டுகள் உருண்டு ஓடிவிட்ட ஒரு தேசத்தின் வறுமையை ஏழ்மையை விரட்ட முடியாமல் போனதற்கு வெட்கப்படாமல் வெள்ளித் திரையில் நம் இந்தியாவின் வறுமை வெளிச்சம் போட்டுக் காட்டப்படுகின்றது என்பதற்கு ஆவேசப்படுகின்றனர்.

"தனி ஒருவனுக்கு உணவு இல்லை எனில்
ஜகத்தினை அழித்திடுவோம்"

– என்று போர்க்குணம் கொண்டு பாடினான் பாரதி.

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகு இயற்றியான்"

– என்று ஆவேசப்பட்ட திருவள்ளுவர், இன்னமும் பிச்சை எடுத்து வாழ்கின்ற வாழ்க்கை இருக்கின்றது. அதற்கு யார் காரணம்? வறுமைக்கும், ஏழ்மைக்கும் காரணம் யாராய் இருந்தாலும் அவர்கள் அழிக்கப்பட வேண்டியவர்கள் என்று திருவள்ளுவர் போர்ப் பிரகடனம் செய்தார். வறுமையை, ஏழ்மையை எதிர்த்த பாரதியார், திருவள்ளுவர் கோபம் இன்று நீர்த்துப் போய் இருக்கின்றது.

அமெரிக்காவில் 1949-ல் பிங்கி என்ற ஒரு திரைப்படம் கறுப்பு நிறப் பெண்ணின் கதையைப் பற்றியது. வெள்ளைக்கார ஆணுக்கும், கறுப்பு நிறப் பெண்ணுக்கும் பிறந்த பெண்ணின் வாழ்க்கை படமாக்கப்பட்டிருந்தது. வெள்ளைக்கார மருத்துவர் கறுப்புப் பெண் பிங்கியை நேசிக்கின்றார். அந்தப் பெண் எம் என்ற வெள்ளைக்காரச் சீமாட்டிக்குப் பணிபுரிந்த காரணத்தால் அந்த அம்மையார் தம் கோடிக்கணக்கான மதிப்புள்ள சொத்துக்களை நீக்ரோ பெண்ணுக்கு உயில் எழுதி வைத்துவிடுகிறார். கறுப்பு இனப் பெண்ணுக்குச் சொத்து உரிமை இல்லை என்று செல்வச் சீமாட்டியின் உறவினர்கள் வழக்குப் போடுகின்றார்கள். வழக்கு நடத்தக்கூட வசதி இல்லாத பிங்கிக்கு நீதி மன்றம் சொத்து உரிமை உண்டு என்று தீர்ப்பளித்துவிடுகின்றது. திரண்ட செல்வத்தைப் பெற்ற பிங்கி தன் காதலைத் தியாகம் செய்துவிட்டு அமெரிக்காவின் தென் மாநிலங்களில் ஒடுக்கப்பட்ட கறுப்பு இனப் பெண்கள் சேவைக்காக செவிலியர் பள்ளி தொடங்கி தம் வாழ்க்கையை அர்ப்பணித்தார்.

1949-ல் கறுப்பு இனப் பெண்ணின் காதல் கதையை சித்திரிக்கும் "பிங்கி" திரைப்படம் திரையிடப் பெருந்தடை. அமெரிக்காவின் டெக்கான் மாநிலத்தில் சென்சார் போர்டு விதித்த தடை கறுப்பு இனப் பெண்ணை வெள்ளைக்கார வாலிபர்

காதலிப்பதாய்க் காட்டியது பெரும் குற்றம்; அதைவிடப் பெரும் குற்றம். நீக்ரோ பெண் என்று கூறிய பின்னும் வெள்ளைக்காரர்கள் தொட்டு அடித்தது. அடிப்பதற்குக் கூட ஒரு கறுப்புப் பெண்ணை தொடுவது குற்றமாகக் கருதப்பட்டது. சென்சார் போர்டு அனுமதி மறுப்பை மீறி கெல்லிங் என்பவர் மார்ஷல் நகரில் இத் திரைப்படத்தைத் திரையிட்டதற்கு அபதாரம் விதிக்கப்பட்டார். அமெரிக்க உச்சநீதி மன்றம் கருத்துச் சுதந்திரத்தில் தலையிட உரிமை இல்லை என்று கெல்லிங்குக்கு விதிக்கப்பட்ட தண்டனையை ரத்து செய்தது. 1950களில் கறுப்பு நிறப் பெண்ணின் வாழ்க்கையைக் காட்டுவதற்கு எதிர்ப்பும், தடையும், இருந்த அமெரிக்க தேசத்தில் இன்று கறுப்பு இனத்தைச் சேர்ந்த "ஒபாமா" குடியரசுத் தலைவர் ஆசனத்தில் அமர்ந்திருக்கின்றார். நிற, இன வேற்றுமையில் இருந்து அமெரிக்க தேசம் எவ்வளவு வேகமாய் விடுபட்டுவிட்டது என்பதற்கு அடையாளம்.

அடக்கப்பட்ட, ஒடுக்கப்பட்ட மனித உரிமை மறுக்கப்பட்ட மக்களின் விடியலுக்காக அரசியல் சாசனம் கண்ட இந்திய தேசத்தில் ஏழ்மையும், இல்லாமையும் சாதி, மத பேதங்களும் மாறாத நிலைப்பாடு. அதை மாற்றும் நாளே மனித உரிமையின் மகிழ்ச்சித் திருநாள்!

இசை உலகில் இந்தியாவின் பெருமையை உலகத்தின் உயரத்தில் ஏற்றி வைத்த பெரும் இசை மேதை ஏ.ஆர். ரகுமான் அவர்களின் மகத்தான சாதனையைப் போற்றுவோம். விருதுகளின் வெளிச்சத்திற்குப் பின்னே இருளாய் மறைந்து நிற்கும் இந்தியாவின் ஏழ்மையை விரட்டுவோம், இல்லாமையும், தீண்டாமையும் இல்லாத இந்தியாவை உருவாக்குவோம். காந்தியின் பொருட்களை மீட்டிய நாம், காந்தியத்தையும் மீட்டு காந்தி தேசத்தை உருவாக்குவோம்.

(கையொப்பம்)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 97. மானம்

தமக்கும் தாம் பிறந்த குடிக்கும் தாழ்வு வராது காக்கும் உணர்வு மானமாகும். செய்ய வேண்டுவனவற்றைச் செய்யாது இழிவுபடுதல், செய்ய வேண்டாதது செய்து இகழ்ச்சியுறுதல். தாமும் தம் குடியும் அறியாமையிலும் வறுமையிலும் கிடந்துழலும் கொடுமை கண்டு வருந்தல், மாற்றம் விரும்புதல் ஆகியன மானமாம்.

*இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்*
*குன்ற வருப விடல்.* (961)

உயர்குடிப் பிறந்தான் ஒருவன் தமது குடிப்பிறப்பின் பெருமை கெடாதவாறு வரும் சிறப்பு (பெருமை) இன்றியமையாதவையாக இருப்பினும் ஏற்கமாட்டார்கள்.

வாழ்தலுக்கும் மேலும் வளர்தலுக்கும் உரிய சிறப்பு இன்றியமையாச் சிறப்பு.

ஒரு காரியம் செய்யாவிடத்துச் சிறப்பு வரும் என்றாலும் "உயர் குடிப்பிறந்தார் செய்யா தொழியின்" என்றும் கூறுவர். தவறில்லையாயினும் சிறப்புடைப் பொருளாகாது.

*சீரினும் சீர்அல்ல செய்யாரே சீரொடு*
*பேராண்மை வேண்டு பவர்.* (962)

புகழ் தேடும் வழியிலும் சீரல்லதைச் செய்யார் சீரொடு பேராண்மை வேண்டுபவர்.

"பேராண்மை" என்பது வஞ்சம் தீர்த்தல் அல்ல, அகிம்சையும் பேராண்மையே.

*பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய*
*சுருக்கத்து வேண்டும் உயர்வு.* (963)

செல்வப் பெருக்கத்தின் போது பணிவு வேண்டும். சிறுமையுடன் கூடிய வறுமை வந்த பொழுது பெருமித உணர்வு வேண்டும். "செல்வச் செருக்கு" பணிய ஒட்டாது. ஆதலால் செல்வ ஆக்கம் வந்த பொழுது பணிவு வேண்டும் என்றார். வறுமையின் உடன் வரும் இரத்தல் முதலிய இழிவுகளைத் தவிர்க்க "உயர்வு வேண்டும்" என்றார்.

*தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்*
*நிலையின் இழிந்தக் கடை.* (964)

தலையினை விட்டு நீங்கிய மயிரினை ஒப்பர் தம் நிலையினின்றிழிந்த மாந்தர். "இழிந்த" என்பதால் தானே உதிர்ந்தது என்று கொள்க. வேண்டாத மயிரினை நீக்கவும் செய்கின்றனர். தலையினின்று பிரிந்த மயிர் இன்று சவுரியாக விலை போகிறது என்பதனை மறவாதீர். சவுரிக்கு நல்லமதிப்பு.

*குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ*
*குன்றி அனைய செயின்.* (965)

குடிப்பிறப்பில் குன்று போல உயர்ந்து விளங்குவோரும் ஒரு சிறு குன்றிமணியளவு குடிப்பிறப்புக்கு ஒவ்வாத காரியங்களைச் செய்யின் குன்றிவிடுவர்.

"குன்றி – குன்றிமணி" சிந்திக்கத்தக்கது.

*புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று*
*இகழ்வார்பின் சென்று நிலை* (966)

புகழ் இல்லை: தேவருலகில் செலுத்துதலும் இல்லை. அஃது தெரிந்தும் தம்மை இகழ்வார் பின் சென்று நிற்றல் ஏன்? புகழ்பட வாழ்தல் வேண்டும். அங்ஙனம் புகழ்படவும் வாழாமல் இகழ்வார்பின் சென்று நிற்றல் தகாது.

*ஒட்டார்பின் சென்றுஒருவன் வாழ்தலின் அந்நிலையே*
*கெட்டான் எனப்படுதல் நன்று* (967)

ஒருவனுககுத் தன்னை ஒட்டி உறவு கொள்ளாது இகழ்வார் பின் வாழ்வதைவிட, அவன் கெட்டுப் போனான் என்ற சொல்லோடு வாழ்தல் நன்று.

விரும்பி உறவு கொள்ளாது இகழ்வாரின் பின் செல்வதில் என்ன பயன்? ஒன்றுமில்லை. மானமிழப்பதுதான் மிச்சம்.

"கெட்டான்"பொருள் முதலிய வளத்தில் குன்றிப் போன நிலை.

*மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை*
*பீடழிய வந்த இடத்து* (968)

ஒருவருக்குப் பெருந்தன்மையும் பெருமையும் அழியும் சூழல் வந்துற்ற போழ்தும் சாவாமல் உடலோம்பி வாழ்தல் சாவாமைக்கு மருந்தோ?

"சாவாமைக்கு மருந்து" பெருந்தகைமையுடன் வாழ்தலேயாம். "ஊனோம்பும் வாழ்க்கை" என்றது "உயிர் இல்லை" என்றுணர்த்த.

*மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்*
*உயிர்நீப்பர் மானம் வரின்.* (969)

கவரிமான் தன் உடலில் உள்ள ஒரு மயிர் நீங்கினாலும் வாழாது. அதுபோல அவமானம் வந்துழி உயிர் நீப்பர் சான்றோர்.

"மானம் உயிர்நிலை" என்று வாழும் நெறி.

*இளிவரின் வாழாத மானம் உடையார்*
*ஒளிதொழுது ஏத்தும் உலகு.* (970)

அவமானம் வந்த பொழுது வாழ்தல் செய்யாது மரணத்தைத் தழுவுவோரின் புகழை உலகு தொழுது வாழ்த்தும்.

"மானத்துடன் வாழ்தலே புகழ்" என்றுணர்த்தியது.

(தொடரும்)

"ஒரு பொருளின் மதிப்பைக் கூட்டுவது உழைப்பு." "தங்கம் விலை மதிப்புடையதுதான். ஆனால் அத்தங்கத்தின் மதிப்பறிய, சாதா மதிப்புடைய மாற்றுக்கல் தான் பயன்படுகிறது. அதுபோல.உயர்ந்த சிந்தனைகள் கூட சராசரி மனிதரிடத்தில் தோற்றுவிக்கும் தாக்கங்களைப் பொறுத்தே மதிப்பிடப் பெறும்."

"எந்த ஒரு செயலுக்கும் பயன் என்ன என்று அளந்தறிதல் ஒழுக்கத்தினை வளர்க்கும். உழைப்பின் திறனை வளர்க்கும்."

- அருள்நெறித் தந்தை

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# பெரியபுராணம் புலப்படுத்தும் வாழ்க்கைநெறி

(புலவர். ச.மு. விமலானந்தம்)

## 12. பூசலாரின் புனிதக்கோயில்

**தொ**ண்டைநாட்டில் திருநின்றவூரில் பூசலார் நாயனார் தோன்றினார். அவர் சித்தத்தில் வரும் உணர்வுகளையெல்லாம் சிவபெருமான் திருவடியில் சேரும்படிச் செய்தார். அவர் உடல் வளர, வளர உள்ளத்தில் அன்பும் வளர்ந்து வந்தது. அவர் உண்மைப்பொருளான இறைவனை அடைவதற்கு ஏதுவான வேத நீதிக்கலைகளையெல்லாம் கற்றார். சிவனடியார்களுக்குப் பணி செய்தலே தக்கது என்று எண்ணினார்; அவர் தாம் தேடிய பொருளையெல்லாம் சிவனடியார்களுக்கே தந்தார்.

பூசலார் தம்மிடம் பொருள் இல்லாமையை எண்ணிப் பாராது இறைவருக்குக் கோயில் கட்ட விரும்பினார். அதற்கான பெரும்பொருளைப் பெற முயன்றும் முடியவில்லை. "இனி என்ன செய்வேன்?" என்று வருந்தினார். அவர் தம் மனத்தில் நினைவால் (உணர்வால்) கோயில் கட்டத் துணிந்தார்.

பூசலார் சிந்தையால் செல்வத்தைச் சேர்த்துக் கொண்டார்; கோயிலைக் கட்டுவதற்குரிய சாதனங்களையும் (பொருள்களையும்) கட்டடத் தொழிலாளர், தச்சர் முதலானவர்களையும் மனத்தில் தேடிக்கொண்டு, நல்ல நாள் பார்த்து ஆலயத்தின் அடிநிலையை (அஸ்திவாரத்தை) எடுத்தார். இரவு பகல் பாராது, உறங்காமல் ஊக்கத்தோடு உள்ளத்தில் கோயில் கட்டி முடித்தார். கிணறும், குளமும் அமைத்தார்; கோயிலைச் சுற்றி மதிலை அமைத்தார்; கோயிலுக்குக் குடமுழுக்கு செய்வதற்கான நாளையும் குறித்தார்.

அக்காலத்தில் காஞ்சியலிருந்த பல்லவ மன்னன் இராச சிம்மன் பெருஞ்செலவில் கற்கோயிலைக் கட்டி முடித்து, அதற்குக் குடமுழுக்கு நாளைக் குறித்தான். அந்நாள் பூசலார் குறித்த நாளே! அதனால் இறைவர், அரசர் கனவில் தோன்றி, "பூசலார் என்ற அன்பர் திருநின்றவூரில் நெடிது நாள் நினைந்து கட்டியுள்ள நீடாலயத்துள் நாளை நாம் புகுவோம்; நீ கட்டிய கற்கோயிலுக்கான குடமுழுக்கை நாளை ஒழிந்து பின் வைத்துக்கொள்வாய்" என்றருளினார்.

அதைக்கேட்ட அரசன் பூசலாரைக் காணவும், அவர் கட்டிய கோயிலைக் காணவும் திருநின்றவூருக்குச் சென்றான்; அங்குப் "பூசலார் கட்டிய கோயில் எங்குள்ளது?" என்று கேட்டான். "பூசலார் கோயில் எதுவும் கட்டவில்லையே" என்றனர். பிறகு அரசன் "பூசலார் யார்?" எனக் கேட்டான். "அவர் இவ்வூரில் வாழும் அந்தணர்" என்றனர். அவரை அழைத்து வருமாறு சொல்லாமல், தாமே இறைவரின் அன்பரான பூசலார் இருக்கும் இடத்திற்குச் சென்றான். அந்த அளவுக்கு அரசன் அடியாரிடத்து மதிப்பு வைத்திருந்தான்.

அரசன் பூசலாரை வணங்கி, "நீங்கள் இறைவரே போற்றுமாறு கட்டிய கோயில் எது? அந்தக் கோயிலுக்குக் குடமுழுக்கு என்பதை இறைவனால் அறிந்து அக்கோயிலைக் கட்டிய உங்கள் திருவடியை வணங்க வந்தேன்" என்றான்.

அதைக் கேட்ட பூசலார், "என்னையும் ஒரு பொருளாகக் கருதி எம்பெருமான் அருளிச் செய்த கோயில் நான் உள்ளத்தில் நினைத்துக் கட்டிய கோயிலாகும்" என்று கூறி கட்டிய விதத்தை விளக்கினார். அரசன் வியந்து, அவரைப் போற்றி வணங்கித் திரும்பினார். பூசலார் தாம் காட்டிய கோயிலுக்குக் குடமுழுக்கு செய்து நாள்தோறும் பூசை செய்து சிவனடி சேர்ந்தார். "உள்ளம் பெருங்கோயில்" என்றார் திருமூலர். பூசலாரைப் போல நாமும் பக்தி செலுத்திப் பரமனருள் பெறுவோமாக!

*(தொடரும்)*

# அருளாலய சித்தாந்தம்

(தமிழாகரர். **தெ. முருகசாமி**, புதுச்சேரி)

*முப்பொருள் உண்மை யென்று*
*முத்தமிழ்ச் சமயச் சான்றோர்*
*ஒப்பிலா இறைவன் என்றும்*
*உயிருடன் பாசம் என்றும்*
*தப்பிலா வாறாய்ச் சொன்ன*
*தகுபொருள் பற்றி நானும்*
*செப்பிட விழையும் போது*
*செகத்துளீர் சேவித் தேனே!*

*எங்குமுளன் இறைவன் என்றே*
*எல்லோரும் சொல்கின் றார்கள்!*
*தங்குதடை யின்றிக் காணும்*
*தரணியுள சமய மெல்லாம்*
*பொங்குபல வாயி ருந்தும்*
*பொற்புடனே அவர வர்க்காய்*
*எங்களது கடவுள் என்றே*
*இயம்புகிறார் வெவ்வே றாக!*

*எங்குமுளான் கடவுள் என்றால்*
*எவர்தீமை செய்தா லும்மே*
*அங்கவரை ஒறுத்தல் வேண்டி*
*அப்போதே அங்குத் தோன்றி*
*இங்கிதனைச் செய்த தாலே*
*இவ்வின்னல் அடைவாய் என்றே*
*அங்கங்கே தண்டித் திட்டால்*
*அநியாயம் வளரா தன்றோ!*

*அதுபோல உயிராம் ஆன்மா*
*அலைந்தலைந் தாசைப் பட்டே*
*எதுநன்மை தீமை யென்று,*
*எதிலுமே தெளிவில் லாமல்*
*புதுவிதமாய் மயங்கி அந்தோ*
*புன்மையில் அகப்பட் டேதான்*
*மதுகுடித்தோர் மயங்கல் போல*
*மயங்குதல் ஏனோ தானோ?*

சார்ந்ததன் வண்ணம் என்று
சால்புறு ஆன்மா வைத்தான்
சார்த்தியே சித்தாந் தத்துள்
சாற்றுதல் போல நாட்டில்
சார்ந்திடும் கூட்டுக் கேற்ப
சாய்ந்திடும் கட்சி யெல்லாம்
சார்விடம் இன்றித் திரிதல்
சார்ந்ததன் வண்ணம் அன்றோ?

தேனினில் மொய்த்த ஈதான்
தெருவோரச் சேற்றில் மொய்த்து
வானினில் பறந்து மீண்டும்
வளர்தேனில் மொய்த்து மெய்யாம்
ஊனினில் உள்ள புண்ணில்
உட்கார்ந்து சுவைத்துப் பின்னர்
கானினில் திரிதல் போலக்
கலங்கல்தான் ஆன்மா வாழ்வோ?

அடுத்துள பாசந் தானும்
அளப்பில என்ப தோடு
மடுத்திடும் அறிவு தானும்
மன்னிடாக் கார ணத்தால்
அடுத்ததை ஆன்மா பற்றின்
அதன்வழி ஆகும், ஆனால்
படுத்திடும் பரத்தை நாடின்
பஞ்சுபோல் பொசுங்கித் தானே!

இம்மூன்று பொருளில் உள்ள
இடைப்பட்ட ஆன்மா தானும்
செம்மையாய் ஒட்டிக் கொள்ளும்
செம்பொருள் நாடும் போது!
வம்மென இறையுந் தானே
வந்தருள் செய்யும் ஆனால்
இம்மியும் இறைதான் பாச
இரும்பினை ஒட்டா தந்தோ!

இவ்வா றிறையுயிர் பாசம்
என்கின்ற முப்பொருள் தம்மை
இவ்வைய வாழ்வில் தானும்
எல்லோரும் உணர்கின் றாரா?
எவ்விதம் உணரா ராகி
இருக்கின்றார் என்று, எண்ணி
கவ்விய தூக்கத் தாலே
கண்மூடி அயர லானேன்!

தூக்கத்தில் வந்தோர் சொன்னார்
துவளாதே எண்ணத் தாலே!
ஆக்கிய செயலுக் கேற்ப
அவரவர் நன்மை தீமை
தாக்கிட அனுப விப்பர்!
"தகுநொய்யும் கஞ்சிக் காகும்"
வாக்கியம் போல இறையால்
வருவதொன் றில்லை யென்றார்!

அலைகின்ற காற்றைப் போல
அலைகின்ற ஆன்மா தானும்
நிலையில்லா தெங்கும் சென்று
நிம்மதியை இழப்ப தாலே
கலைகின்ற வேடம் போலக்
கட்சிமாறும் செயலைப் போல
மலையான பாவத் தாலே
மரணத்தால் பிறக்குந் தானே!

"[1] அசத்தான பாசத் தைத்தான்
அடியோடு வெறுத்து விட்டால்
[2] அ,சத்தான வாழ்வு கூடும்
அனுதினம்" என்று வந்தோர்
[3] அசத்திய வாக்கைக் கேட்டு
அயர்ந்தநான் எழுந்து பார்த்தேன்
[4] அ,சத்திய அருளா லயத்தின்
அருவுரு கண்ணால் தானே!

1. அறிவில்லாததான, 2. அந்த வலுவான, 3. அறிவு தெளிவித்த,
4. அந்த உண்மையான

## திருக்களாப்பட்டியில்
# படியான் இளைஞர் நற்பணி மன்றத்தின் கல்விக் கொடை விழாவில்
### தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் ஆற்றிய உரை

மிகச் சிறப்பான இந்தப் பணிகளில் பங்கெடுத்துள்ள படியான் இளைஞர் நற்பணி மன்றத்தைப் பாராட்டுகிறோம்.

சுவாமி விவேகானந்தர் கேட்டார். 100 இளைஞர்களைக் கொடுங்கள்! இந்தியாவை மாற்றிக் காட்டுகிறேன் என்றார்.

படியான் இளைஞர் மன்றத்தினர் இந்தச் சின்ன கிராமத்தில் இருந்து கொண்டு பரந்துபட்ட பார்வையில் செயலாற்றுவதுதான் மிகுந்த பாராட்டுக்குரியது. குறிப்பாக திருக்களாப்பட்டி கிராமத்திற்கு 10 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு குடமுழுக்கு விழாவுக்காக வந்திருக்கிறோம். அற்புதமான இளைஞர்கள். சாதி, மத வேறுபாடுகள் இன்றி, ஒற்றுமையோடு வரவேற்றனர். பார்த்து வியந்து விட்டோம்.

தமிழகத்தின் பெரும்பாலான இடங்களுக்கு யாம் சென்றிருக்கிறோம். தமிழ் உணர்வோடு, சமூக வேட்கையோடு சாதி, மத வேறுபாடுகள் இன்றிச் செயல்படும் இளைஞர்களைத் திருக்களாப்பட்டியில் தான் முதன் முறையாகப் பார்த்தோம். வெறும் வார்த்தைக்காக, திருக்களாப்பட்டியில் கூறவேண்டும் என்பதற்காக சொல்லவில்லை.

பெரும்பாலும் இளைஞர்களுக்கு வழிகாட்ட ஆட்கள் தேவை; வழிகாட்டிகள் தேவை. ஆணையிட்டால் செயல்படுவதுதான் இளமையின் நிலை. தானே செயல்படுவதுதான் தலைமையில் இயல்பு. தானே செயல்படுகிற தலைமையின் வயதை, வாழும் வருடத்தால் அல்ல. ஆற்றும் செயலால், செய்து காட்டுகிறவர்கள் தான் நம் படியான் இளைஞர் நற்பணி மன்றத்தினர்.

10 ஆண்டுகளுக்கு முன் செயல்பட்ட இளைஞர்களின் எண்ணிக்கை குறைந்திருக்கலாம். ஆனால் செயல் துடிப்பின் வேகம் குறையவில்லை. உணர்வுகள் குறையவில்லை. நெருப்பை மூடியிருக்கிற சாம்பலைப் போல, சாம்பலுக்குக் கீழே வெப்பம் இருப்பதைப்போல - அக்னிக் குஞ்சொன்று கண்டேன்; அதனை ஆங்கோர் பொந்தொன்றில்

வைத்தேன்; வெந்து தணிந்தது காடு; என்று உணர்வு குன்றாத இளைஞர்கள் - ஊக்கம் குன்றாத இளைஞர்கள் - பொதுப்பணியில் ஆர்வப்படுகிற இந்த இளைஞர்களை ஊக்கப்படுத்துவது; ஆர்வப்படுத்துவது கிராமத்துப் பெரியவர்களின் கடமை என்பதை அன்போடும், நேசத்தோடும் கேட்டுக் கொள்கிறோம்.

பத்தாண்டுகளுக்கு முன் தமிழில் குடமுழுக்கு விழா நடத்தினார்கள். இன்றைக்கு தமிழில் குட முழுக்கு விழா நடத்துவது சர்ச்சைக்குரிய செய்தியாகப் பேசப்படுகிறது. உலகத்திலேயே தமிழகத்தில், தமிழ் மண்ணில் தான் இப்படிப் பேசுகின்ற நிலை.

வளர்ந்து வரும் நாடுகளில் அவர்களின் சமயத்துக்கென்று தனி மொழியில்லை. மக்கள் பேசுகின்ற மொழியில்தான் கடவுளின் வழிபாட்டுச் சடங்குகள் உலகம் முழுவதும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. தமிழகத்தில் மட்டுமே தமிழனைப் புறக்கணிக்க வேண்டும் என்பதற்காகவே தமிழ் புறக்கணிக்கப்படுகிறது. ஆனாலும், அந்த உணர்வு குன்றாத இளைஞர்களைப் பாராட்டி, இப்படிப்பட்ட இளைஞர்களை ஊக்கப்படுத்த வேண்டியவர்களாக நாம் இருக்கிறோம்.

இளைஞர்களின் சக்தி நேர்முகப் பாதையில் நெறிப்படுத்தப்பட வேண்டும். நீராவியை நேர்முகத்தில் இயக்கினால் பல்லாயிரம் ஆற்றலுடைய எந்திரங்களை இயக்க முடியும். அதுவே மறைமுகமானால் பல விபத்துக்களையும், பேராபத்துக்களையும் சந்திக்க வேண்டியது வரும்.

உலகத்தின் மகா கோடீஸ்வரர்கள் பட்டியலில் முதலில் இருப்பவர் ராக்பெல்லர். ஆகாயத்தில் பறந்து கொண்டிருக்கும் போதே பணி செய்து கொண்டிருந்தார். அவரின் கணிப்பொறி இயங்கிக் கொண்டிருந்தது. இளைஞர் ஒருவர் அவரைச் சந்தித்தார். நீங்கள் தான் உலகத்தின் மிகப்பெரிய பணக்காரர் ஆகிவிட்டீர்களே. பிறகு ஏன் பறக்கிற இந்த விமானத்திலும் வேலை செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று கேட்டார்.

அவர் சிரித்துக்கொண்டே, "தம்பி இந்த விமானம் எவ்வளவு அடி உயரத்தில் பறக்கிறது" என்று கேட்டார்.

"50 ஆயிரம் அடி உயரத்தில்" என்றான்.

"50 ஆயிரம் அடி உயரத்திற்கு வந்துவிட்டோம் என்று விமானி நினைத்து சும்மா இருந்துவிட்டால் என்ன ஆகும்?"

"விபத்து ஏற்படும்" என்று இளைஞர் சொன்னார்.

இதுபோல்தான் வாழ்க்கையும், நாம் சிகரத்தில் ஏறிவிட்டோம் என்று இளைப்பாறிவிட முடியாது. களைப்பால் ஓய்வெடுக்கவும் முடியாது. சிகரத்தில் ஏறுகிறபோதுதான் இன்னமும் அதிகமாக உழைக்கக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பது தெரியும். ஆனால், பலரும் சிகரத்தில் ஏறிய பிறகும் பள்ளங்களைப் பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இமயத்தின் உயரத்தில் இருந்துகொண்டு பள்ளத்தாக்குகளைப் பற்றியே கவலைப்படுகிறார்கள். இந்த நிலைப்பாடுதான் மாறவேண்டும்.

இன்றைய இளைஞர்களில் சிலர் எப்படி இருக்கிறார்கள்? எதிலும் எதிர்முகப் பார்வை. தாங்கள் அதிகமாகத் தெரிந்திருக்கிறோம் என்று நினைத்துத் திறமைகளை, வசதிகளைக்கூட ஏளனப்படுத்துகிறவர்களாக இருக்கிறார்கள்.

ஒரு ஊருக்கு எல்லாம் தெரிந்த ஞானி வருகிறார். யார் எந்த ஐயத்தைக் கேட்டாலும் தீர்க்கமாய் விளக்கம் கூறினார். இளைஞர் ஒருவர் வருகிறார். எல்லாவற்றுக்கும் விளக்கம் தருகிறீர்களாமே? கணிப்பொறியின் இணைய தளத்தைவிட திறமையானவரா? உம்மைப் பரிசோதித்துக் காட்டுகிறேன் என்றார் அவர்.

அந்த இளைஞர் உன்னைத் தோற்கடிக்கிறேன் பார் என்று கங்கணம் கட்டிக்கொண்டு கையில் ஒரு பட்டாம் பூச்சியை பிடித்து மறைத்து வைத்துக்கொண்டே ஞானியிடம் வந்தார்.

என் கையில் உள்ள பட்டாம் பூச்சி இறந்துவிட்டதா? உயிரோடு இருக்கிறதா? என்று கேட்டார்.

இறந்துவிட்டது என்று சொன்னால், உயிருடன் அப்படியே எடுத்துக்காட்டலாம். உயிருடன் இருக்கிறது என்றால் அப்படியே நசுக்கிக் கொன்றுவிட்டு, இறந்துவிட்டது என எடுத்துக்காட்டலாம் என்று நினைக்கிறார்.

ஞானியோ "உயிரோடு இருக்கிறது, இல்லாமல் போகிறது அது உன் கையில் தானப்பா இருக்கிறது" என்றார்.

வாழ்க்கை யார் கையில் இருக்கிறது? நம் கையில் இருக்கிறது. கருப்பை தாங்கிய தாயும், கடமை ஆற்றிய தந்தையும், சுற்றி வளர்த்த உறவுகளும் அல்ல, நம்மைச் செதுக்குவது. நமக்குள் உள்ள தேவையற்ற பகுதிகளை செதுக்குவது நாமேதான் என்பதை மறந்துவிடக்கூடாது.

அற்புதமான சிலையை, காண்பவர்களின் கண்களைக் கவரும் சிலையை, வடித்து வைத்திருந்தான் சிற்பி.

அவரிடம் சென்று இதை எப்படி வடித்தீர்கள் என்று கேட்டதும், அடக்கமாகச் சொன்னார் அந்த சிற்பி, கல்லின் தேவையற்ற பகுதிகளை நீக்கினேன். தெளிவான சிற்பம் கிடைத்துவிட்டது என்று.

நமக்குள் தேவை இல்லாத பகுதிகள் இருக்கின்றன. அவற்றை நீக்குவதற்கு முனைந்துவிட்டால் நம்முள் மகத்தான மனிதன் கிடைப்பான்.

நமக்குள்ளேதான் இரண்டு உணர்வுகள் இருக்கின்றன. ஒன்று மிருகத்தனமான உணர்வுகள் நமக்குள் புதைந்து கிடக்கிறது. மனிதனின் மனிதத் தன்மையும் நமக்குள் புதைந்துகிடக்கிறது.

விலங்குத் தன்மையை ஒடுக்கி, ஒடுக்கி மனிதத் தன்மையை செதுக்கித் தருவதுதான் உண்மையான கல்வியின் பயன். ஆனால் நம்முடைய கல்வி என்ன செய்கிறது? மனனம் செய்து ஒப்புவிக்கிற கிளிப்பிள்ளைகளையே தயாரித்துக்கொண்டிருக்கிறது. தாயின் கருப்பையில் இருந்து வெளிவருவது விலங்குதான். இந்த விலங்கை மாற்றித் தருவதுதான் கல்வி.

அந்தக் கல்வியை இன்றைய கல்வி உலகம் செய்து காட்டுகிறதா? அதனால்தான் திருவள்ளுவர் சொன்னார்.

எதையும் மகிழ்ந்து சொல்லுவார், நெகிழ்ந்து சொல்லுவார், கனிந்து சொல்லுவார், பணிந்து சொல்லுவார். ஆனால் ஒரு இடத்தில் மட்டும் ஆணையிட்டுச் சொல்லுவார். தந்தையைப் போல் ஆவேசமாய் சொல்லுவார். எங்கே அப்படிச் சொல்லுகிறார். மனித குலத்தைப் பார்த்து, மனித குலத்தின் பிரச்சனைகளுக்கும் சிக்கல்களுக்கும் ஒரே தீர்வு எது? என்று அவர் ஆணையிட்ட இடத்தில்.

கற்க.

மனித குலம் தம்முடைய நிலைப்பாடுகளில் இருந்து உண்மைப் பாதையில் நடைபோட வேண்டுமென்றால், அதற்குத் தேவை கல்வி என்று திட்டவட்டமாய், தெளிவாய், தீர்க்கமாய் சொன்னார்.

எப்பொழுது சொன்னார்? எந்தக் கால கட்டத்தில் சொன்னார்? அன்னசத்திரம் ஆயிரம் கட்டல்; ஆலயம் பதினாயிரம் நாட்டல்; அன்னயாவினும் புண்ணியம்கோடி ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் - என்று பாரதி சொன்னாரே, கோயில் கட்டுவது, குடமுழுக்குச் செய்வது, அன்னசத்திரங்கள் கட்டுவது, தினந்தோறும் ஆயிரம் பேருக்கு உணவு

அளிப்பது இதுதான் மகாபுண்ணியம்" என்று நம்பிக் கொண்டிருந்த சமுதாயத்தில்தான் ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் என்று பாரதி சொன்னது போல், கற்க என்று ஆணையிட்டார் திருவள்ளுவர்.

இன்றைக்கு சமூகம் எப்படிக் கற்கிறது? இன்றைக்கு எல்லோருக்கும் கல்வி - இதுகூட அரசின் கொள்கை் அரசு நிர்வாக எந்திரத்தின் கொள்கை;

முன்பெல்லாம் தனியார்கள் மதுக்கடைகளை நடத்தினார்கள். அரசு கல்வியை நடத்தியது. இப்போது அரசு மதுக்கடைகளை நடத்துகிறது. தனியார் கல்விக்கடைகளை நடத்துகின்றனர்.

இன்றைக்குக் கல்வி தனியார் வசம் ஒப்படைக்கப்பட்டுவிட்டது. சேவை என்ற நிலையை விட்டுவிட்டு நுகர்வு என்ற நிலைப்பாட்டை நோக்கி நம்முடைய கல்வித் திட்டம் வந்திருக்கிறது.

இந்தச் சமூகத்தில் கற்றவர்களின் நிலை என்ன? எம்.ஏ. பட்டம் பெற்றவர் என்ன நினைக்கிறார்? எம்.பில். பட்டம் பெற்றவர்கள்தான் அறிஞர் என்று. எம்.பில். பட்டம் பெற்றவர் நினைக்கிறார் - முனைவர் பட்டம் பெற்றவர்தான் பேரறிஞர் என்று, வேறுசிலர் நினைக்கிறார்கள் - அரங்கத்தில் கடுமையாக உரையாற்றினால் அதுதான் மேதமை என்று, இன்னும் வேறு சிலர் - சில நூல்களை எழுதிவிட்டால் அது மேதமையின் விலாசம் என்று நம்புகிறார்கள். அறிவுக்கு என்ன விளக்கம்?

பேருக்குப் பின்னால் பட்டங்களைப் பொறித்துக் கொள்வதா? பல்கலைக் கழகங்கள் தரும் பட்டங்களைவிட மன்றங்கள் தரும் பட்டங்களைப் போட்டுக் கொள்வதா? அல்லது அரங்கத்தில் அருமையாக உரையாற்றுவதா? அல்லது சில நூல்களை எழுதி விடுவதா? - எது அறிவு? இதற்கு எது சரியான விளக்கம்? யார் இதை தீர்க்கமாய், தெளிவாய் அறிவிக்க முடியும்?

எல்லா ஐயங்களையும் தீர்க்கமாய், தெளிவாய் விரல் நுனியில் விடை தருகிற திருவள்ளுவர் பெருமான் சொல்கிறார். எது அறிவு என்பதற்கு தெளிவான விளக்கம் தருகிறார்.

(தொடரும்)

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# திருக்குறளில் ஊழ்வினைக் கோட்பாடு

(முனைவர். பொ.நா. கமலா)

"ஊழ் என்பது பொருட்களின் உள்ளடங்கிய ஆற்றலின் இயற்பாடு என்னும் இயங்குதிணை முறைமையே ஆகும். ஒருதலைப் பிறழ்ச்சிகள் ஊழியல் நியமவாதம்" என்பார் அவர்[8]. இதிலிருந்து அன்னார் வள்ளுவரது ஊழியல் கோட்பாட்டினை இயங்கியல் (Dialectics) கோட்பாடாகவும், வேத மரபினரின் கருமக் கோட்பாட்டை ஊழியல் நியமவாதமாகவும் (Determinsim) கொண்டது புலனாகிறது.

"வினை" எனும் சொல் பதினைந்து இடங்களில் கருமவினையைக் குறிக்கிறது என்பார் ச. சாம்பசிவனார். அவற்றுள் ஆறு இடங்களை அட்டவணைப்படுத்தி உரைவேறுபாடு காணப்பெறுகிறது.

| எண் | வள்ளுவர் உரை | பரிமேலழகர் உரை | பரிமேலழகர் உரை |
|---|---|---|---|
| 1. | இருள்சேர் இருவினை (5) | அவிச்சையை "இருள்" என்றும், நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாகலின் "இருவினை"... | குழப்பத்தைத் தரும் நல்வினை, தீவினை |
| 2. | வினைப்பகை (207) | வினைப்பகை புக்குழிப் புக்குழிக் கொல்லும் | தீயசெயல்களால் விளையும் பகை |
| 3. | தீவினைப்பால் (209) | நல்வினை, தீவினை என வினைப்பகுதி இரண்டாகலின் பால் | தீமை |
| 4. | உயிர் அஞ்சும் வினை (244) | தன் உயிர் அஞ்சுதற்கு ஏதுவாகிய தீவினைகள் உளவாகா. மறுமைக் கண் நரகம் புகாமைக்கு ஏது கூறியவாறு | உயிர் பற்றி அஞ்ச வேண்டிய தேவை |
| 5. | தவா வினை (367) | கெடாமைக்கு ஏதுவாகிய வினை - பிறவித் துன்பங்களால் | நல்வினைகள் |

| | | |
|---|---|---|
| 6. வினை ஆண்மை (904) | வினையை ஆளும் தன்மை இல்லறம் செய்தற்குரிய நன்மை இன்மையின் "மறுமை இலாளன்" | செயலாற்றும் திறமை |

வள்ளுவர் கூறும் "வினை" என்ற குறிப்பான் (சொன்மை - Signifier உணர்த்தும் முதல் நிலைக் குறித்தலையும் (பொருண்மை - Signified), மரபுரைகாரரான பரிமேலழகர் கூறும் இரண்டாம் நிலைக் குறித்தலையும் அடியிற்கண்ட படவிளக்கம் மூலம் அறிய இயலுகிறது.




| | | | |
|---|---|---|---|
| குறி - 1 | முதல்நிலைக் குறித்தல் | - | செயல் |
| குறி - 2 | இரண்டாம் நிலைக் குறித்தல் | - | கருமவினை |

இடைக்காலத்துத் தோன்றிய உரையாசிரியர்கள் தம் காலத்துச் செல்வாக்கு உற்றிருந்த சமயச் சார்பால் வள்ளுவரின் முதல் நிலைக் குறித்தலுக்கு (Denotation) இரண்டாம் நிலைக் குறித்தலை (Connotation) ஏற்றியிருப்பது தெரிகிறது.

இதனால் பிறவிச் சுழற்சியையும், ஊழ்வினையையும், வீடு பேற்றையும் பின்னிப் பிணைத்துக் கூறும் நிலை ஏற்பட்டது புலனாகிறது.

(1) உடல் உழைப்பை முதன்மையாகக் கொண்டது.
சான்று : மடுத்த வாயெல்லாம் .... (624),
உழவு (1031 - 1040)

2. இம்மைத் தன்மைகொண்ட கண்கூடான வாழ்க்கை சார்ந்தது.
சான்று : ஊக்கமுடைமை முதல் நான்கு அதிகாரங்கள்.

3. நியமவாதமன்று, படைப்புத் தன்மை கொண்டது.
சான்று : அடியளந்தான் தாயது எல்லாம் ஒருங்கு எய்துவர் (610)

4. மாற்றங்களுக்கு இடமளிப்பது, இயங்கியல் தன்மை கொண்டது.

மாந்தர்தம் ஊக்கமுடைமை போன்ற பண்புகளுக்கும், அன்னாரது நல்வினை தீவினைகட்கும், அன்னார் வாழ்வு உயர்வு தாழ்வுக்கும் உறவு உண்டு. இவற்றுக்கு இடையே உள்ள உறவு இயங்கியல் உறவு.

## 5.0 ஊழ்வினைக் கோட்பாட்டின் நுண் அரசியல் (Micro - Politics)

ஆள்பவன் - ஆளப்படுவன் உறவைப் பூக்கோ (Focault) அரசியல் பண்புடையதாகக் கருதுவார். சகல சமூக அசைவுகளிலும் அதிகாரம் செயல்படுகிறது என்பது அவர் கருத்து.[10] ஆளும் வர்க்கத்தின் கருத்தியல்களில் வர்க்க நலன்கள் ஒளிந்திருக்கின்றன என்பர்.

வருணதருமம், ஊழ்வினைக் கோட்பாட்டின் வழி கட்டிக் காக்கப் பெற்றது. நிலமுடையவர் - நிலமற்றவர் என்ற சமூக அமைப்பிலே நிலவுடைமையாளர்க்குத் தேவையான உற்பத்திச் சக்திகளை (பணியாளர்கள்) உருவாக்கி அளிக்கும் பணி ஊழ்வினைக் கோட்பாட்டால் சாத்தியமாயிற்று. இதனால் சாதீய ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் அடித்தள மக்களை அந்நிலையிலேயே வைத்திருப்பது ஏதுவாயிற்று. இதுவே ஊழ்வினைக் கோட்பாட்டின் நுண் அரசியலாகும்.

## இறுவாய்

இதுகாறும் கூறியவற்றிலிருந்து வள்ளுவரது ஊழ் கோட்பாடும், வினைக் கோட்பாடும் சமயக் கணக்கர் மதிவழிக் கூறும் பிறரது ஊழ்வினைக் கோட்பாட்டிலிருந்து வேறுபட்டது என்று அறியப்படுகிறது. வள்ளுவம் ஒன்றே அவரவர் இன்பதுன்பத்திற்குத் தெய்வம் பொறுப்பாகாது; அவரவரது வினையை அவரவர் அனுபவித்தே தீர வேண்டும், பரிகாரமில்லை என்றது. மனம், மொழி, மெய்யால் நல்வினைகளைச் செய்து, உயிர்கள் ஞானமயமாகி, இன்ப அன்பினில் தங்கித் திருவருளைத் துய்த்து இன்புறுதலே வீடு (370) என வலியுறுத்துவது வள்ளுவம்.

### பின்குறிப்புகள்


1. Saraswathi Chennakesavan and Vasudeva Reddy, Morals and Society in Indian Philosophy, Brian Carr, Indira Mahalingam [Eds.], Companion Encyclopedia of Asian Philosophy, PP. 106, 266 - 269.

2. Max Otto, Science and the Moral Life, P.132.

3. James Bissett, "The Jainas", Suresh K. Sharma, Usha Sharma [Eds.], Cultural And Religious Heritage of India, Vol. II P.81.

4. இரா. இளங்குமரன், திருக்குறள் ஆராய்ச்சி, பக். 274. 275.

5. சிலம்பு நா. செல்வராசு, ?மழையிலிருந்து தீர்த்தம் வரை படி மலர்ச்சியியல் அய்வு?, தமிழியல் ஆய்வு, ஞா.த.ப. ஆய்வு மன்றம், 1995, பக். 299 - 304.

6. இரா. இளங்குமரன், மு.கூ.நூ.

7. ச.வே. சுப்பிரமணியன், திருக்குறள் நயவுரை, ப.107.

8. சொ. நாராயணசாமி, வள்ளுவத்தின் மீட்சி, பக். 18, 19.

9. க.ப. அறவாணன், திருவள்ளுவம். பக். 490 - 492.

10. ந. முத்துமோகன், மார்க்சிய விவாதங்கள், பக். 225.

# அருளை நல்கு

(புலவர். மு. இராமலிங்கம்)

முருகனவன் திருத்தாளைக் காலை மாலை
முழுமனதா வணக்கங்கள் செய்து வந்தால்
இரும்பிறவி இடரெல்லாம் எந்த நாளும்
இருக்கின்ற துன்பமுடன் சேர்ந்து போகும்
பெருமைதரும் வீடுபேறும் எளிதாக் கிட்டும்
பேசரிய அவன்புகழை என்ன சொல்ல
அருவுருவாய் அவனிதனில் இயங்கும் தேவே
அடியவனுன் திருப்பதத்தைப் போற்று கின்றேன்.

எல்லாமாய் எங்குமாய் நிறைந்த உன்னை
எங்கெல்லாம் தேடியுமே என்ன கேட்டேன்!
நல்லவர்கள் செயல்வடிவில் நிறைந்த உன்னை
நாடோறும் நினைந்துருக வைத்தாய் அப்பா
பல்பொருளும் பல் வளமும் தருவாய் அப்பா
பரமனுக்கே உபதேசம் சொன்ன தேவா
வல்லமையில் வரங்கேட்க வந்தேன் இல்லை
வாழ்வதற்கு அருள்தந்து காப்பாய் அப்பா

காடுமலை மேடுபல சென்ற போதும்
மேதினியில் உன்னையுமே காண லாமோ
வீடுபல சதமென்று வாழ்ந்த பேரும்
வேண்டாமே முருகனவன் என்ற பேரும்
ஓடிவந்து வணங்குவதைக் காணு கின்றேன்
உன்மனமும் அவர்கட்கு அருளை நல்கும்
பாடுவதும் கூடுவதும் என்றன் வேலை
பால்வடியும் திருமுகத்தில் அருளை நல்கும்

தேடிவரும் சுற்றமெலாம் ஓடக் கண்டேன்
தேடியுமே பொருள்சேர்த்தார் மறையக் கண்டேன்
கூடிமகிழ் அடியவரின் கூட்டம் கண்டேன்
கூடிப்பின் பிரிகின்ற நண்பர் கண்டேன்
மாடுமனை கோடிசெல்வம் இருந்த போதும்
மனமதிலே உன்பெயரும் பதிக்க வேண்டும்
நாடுபல ஆண்டிருந்த மன்னர் கூட
நல்லறங்கள் நாளெல்லாம் செய்ய வேண்டும்.

—

# பந்தமும் நித்தியமே

புலவர்மணி-சித்தாந்த வித்தகர்
**முரு.பழ. இரத்தினம் செட்டியார்**

சித்தாந்தம் 1966

நித்தியமாயும் வியாபகமாயும் உள்ள மலம் முத்திக் காலத்தும் உள்பொருளே என்றும், ஆனால் முத்தான்மாக்களைப் பந்திக்க முடியாத நிலையில் அது நிற்குமாதலால் முத்தியால் மலம் நீங்கும் எனச் சாத்திரங்கள் கூறுகின்றன என்றும், எனவே "மல நீக்கம்" என்பதற்கு "மலபந்த நீக்கம்" என்பதே பொருள் என்றும் யாம் எழுதியிருந்தோம். இக்கருத்து மெய்கண்ட நூற்களில் இனிது தெளிவுறுத்தப்பட்டிருந்தும், அன்பர் திரு. புலவர் பொன். சண்முகனாரவர்கள் அதனை மறுத்தெழுதினார்கள். அவர்கள் உடன் பட்டு எழுதுகின்ற அருளாசிரியரவர்களோ, "சித்தாந்தம்" மலர் 37. இதழ் 4.ல், திருவருளாகிய ஒளிமுன் ஆணவமான இருள் இருந்தும் இராததுபோல் அத்திருவருள் ஒளியுள் அடங்கும் என எழுதி, "இருந்தும்" என்பதன் மூலம் முத்தி நிலையிலும் மலம் இருக்கும் என்பதைப் புலப்படுத்தியிருக்கிறார்கள். ஆகவே பேரன்புமிக்க திரு.புலவர். பொன் சண்முகனார் அவர்கள் யாது காரணம் பற்றி எம்மை மறுத்தனர் என்பதை அறியக்கூடவில்லை. அதன்பின் அன்பர் திரு. சம்பந்தம் செட்டியார் அவர்கள் "மலம் உண்டு; தொடக்கில்லை" என விளக்கமான தலைப்புக் கொடுத்து, உமாபதி சிவம் அருளிச் செய்த "அழிந்திடும் பாசம் என்னில் நித்தம் என்றுரைத்தல் வேண்டா" என்னும் செய்யுளையும், சிவஞான பாடியத்தில் சிவஞான சுவாமிகள், "முத்தியில் மலசத்திக்குக் கேடே அன்றி மலத்திற்குக் கேடில்லை" எனச் சிவாதித்தமணி தீபிகையுடையாரே மேற்கோள் காட்டித் தெளிவுற எழுதியிருப்பதையும் எடுத்துக் கூறி எம் கருத்தை வலியுறுத்தியிருக்கிறார்கள். அவர்களுக்கு எம் நன்றி உரியதாகுக.

உமாபதி சிவமும், சிவஞான சுவாமிகளும் தெள்ளத் தெளிய "முத்தியில் மலத்திற்குக் கேடில்லை" என்பதன் மூலம் மலம் நித்தியம் என்பதை நிலைநாட்டியிருக்க, அருணந்தி சிவம் மட்டும், "பெத்தான்மாக்களிடத்தில் மலம் நிற்பதால் நித்தியம்" எனக் கூறியருளியிருப்பது முரணாகாதா" என்று அன்பர்கள் சிலர் எம்மைக் கேட்டிருக்கிறார்கள். எனவே இக்கட்டுரையில் அது குறித்துச் சிறிது கூற விரும்புகின்றோம்.

முத்தி நிலையில் மலம் நிற்பதற்குச் சித்தாந்த சாத்திரங்களில் காட்டப்படும் உவமை, "ஒளிமுன் இருளாகும்" ஒளியின் முன் இருள் இல்லாமல் போவதில்லை. அதன் மறைப்பாற்றல் செயல்பட முடியாமற் போகும். இதனை "ஒளியின் முன்னர் அழிந்திடும் இருளும் நாசம் அடைந்திடா மிடைந்திடாவே" என உமாபதிசிவம் கூறியருளியிருப்பது கொண்டு அறியலாம்.

அருணந்தி சிவமும் சித்தியார் ஏழாம் சூத்திரம் முதற்பாட்டில், "முனைத்திடாது அசத்துச் சத்தின் முன் இருள் இரவி முன் போல்" எனக் கூறியருளுவதால், ஒளிமுன் இருள் முனைத்து நிற்காதே அன்றி இல்லாமற் போகாது என்பதே அவர்க்கும் கருத்து என்பது தெளிவு.

சித்தியார் பதினொன்றாம், சூத்திரம் 5 ஆம் செய்யுளில் "அருக்கண் புகுத இருள் போமடியிற் பொருந்த மலம் போமே" எனக் கூறுவதால், கதிரோன்முன் இருள் இருந்தும் முனைந்து நிற்காமை போல முத்தி நிலையில் மலம் இருந்தும் முனைந்து நிற்காதே என்பதே. "மலம் போமே" என்பதற்கு அவர் கொள்ளும் பொருள் என்பது இனிது பெறப்படும்.

மேற்கண்ட சூத்திரம் 4ஆம் செய்யுள் பின்வருமாறு கூறுகிறது :

"தெரிவரிய மெய்ஞ்ஞானம் சேர்ந்தவாறே
சிவம் பிரகாசிக்கும் இங்கே சிவன் முத்தனாகும்
உரிய மலம் ஔடதத்தால் தடுப்புண்ட விடமும்
ஒள்ளொரியின் ஒளிமுன்னர் இருளும் தேற்றின்
வருபரல் நீர்மருவு கலங்கலும் போலாகி
மாயாதே தன் சத்தி மாய்ந்து காயம்
திரியும் அளவும் உளதாய்ப் பின்பு காயம்
சேராத வகைதானும் தேயும் அன்றே"

இச்செய்யுள் எதிர்நிரல் நிறைப் பொருட்கோள் முறையில் அமைந்திருக்கிறது. "மெய்ஞ்ஞானம் சேரப் பெற்றோரிடத்தே மலம் தேற்றாங் கொட்டையால் தேற்றப்பட்ட நீரில் அடங்கியிருக்கும் கலங்கல் போல நிற்கும். சிவம் பிரகாசித்தோர் இடத்தே ஒளிமுன் இருள்போல அது நிற்கும்; சீவன் முத்தரிடத்தே மருந்தினால் தடைப்பட்ட நஞ்சு போல அஃது இருக்கும். எனவே மூவரிடத்தும் மலம் தன் ஆற்றல் கெட்டாலும் தான் கெடாமல் நிற்கும்" என அருணந்தி சிவம் இச்செய்யுளில் நமக்கு அறிவுறுத்துகிறார்.

மெய்ஞ்ஞானம் சேரப் பெற்றோர் என்றும் சீவன் முத்தர் என்றும் தனித்தனியே பிரித்து ஓதுவதால், நடுநின்ற "சிவம் பிரகாசித்தோர்" பரமுத்தி நிலைக்கு எடுத்துக்காட்டாவர் என்பது தானே போதரும். அவரிடத்தே மலம் நிற்பதற்கு இச்செய்யுளில் காட்டப்படும் உவமை, "ஒளிமுன் இருளாதலால்" அருணந்தி சிவம் முன்னர் நமக்கு விளக்கியிருப்பது கொண்டு, பரமுத்தி நிலையிலும் மலம் முனைந்து நிற்காதே அன்றி இல்லாமற் போகாது என நாம் நன்கு அறிந்து கொள்ளலாம்.

"காயம் திரியும் அளவும் உளதாய்ப் பின்பு காயம் சேராதவகை தானும் தேயும் அன்றே" என்பதற்குப் பொருள், உடம்பு நீங்கிய பரமுத்தி நிலையில் மலம் இல்லாமற் போகும் என்பதன்று. பரமுத்தி நிலைக்கு "ஒளி முன் இருள்" உவமை இச்செய்யுளிலேயே காட்டப்படுவதால் அவ்வுவமைக்கு மாறாகப் பரமுத்தி நிலையில் மலம் இல்லாமற் போகும் எனக் கூறுவது பொருந்தாதாக முடியும். மலம் சத்தி கெட்டுப் பரமுத்தி நிலையிலும் நிற்கும்; சீவன் முத்தி நிலையிலும் நிற்கும். சத்திகெட்ட மலத்திற்கு எச்செயலும் இருக்க முடியாது. எனவே இது பரமுத்தி நிலைக்குப் பொருந்தும். ஆனால் சீவன் முத்தி நிலையில் உடம்பு இருப்பதால், அஃது இருக்கும் வரைக்கும் செயல் இருக்கவே செய்யும். ஆகவே மலம் சத்திகெட்டு நிற்கும் என்பது சீவன் முத்தர்க்குப் பொருந்தாது; அவரிடத்தே மலத்திற்குச் சத்தி உண்டு என்று சொன்னால், பின் அது பிறவிக்கு ஏதுவாக முடியும். இதனால் அவரிடத்தே மலம் சத்தியுடன் நிற்கும் என்றும் சொல்ல முடியவில்லை; அப்படியானால் எங்ஙனம் சொல்வது? சீவன் முத்தரிடத்தே மலம் சத்திகெட்டாலும் வாசனை மாத்திரையாய் நிற்கும்; உடம்பு நீங்கிய பின் வேறு பிறவிக்கு ஏதுவில்லாமல் இவ்வாசனைகளும் கழிந்தொழியும் என்றே கூற வேண்டும். இதனையே "காயும் திரியும் அளவும் உளதாய்" என்னும் அடி உணர்த்துகிறது. "மலம்போமே" என 5-ஆம் செய்யுளில் கூறியதற்கு "மலம் இல்லாமற்போகும்" எனக் கொள்ளாமல், "அருக்கன் முன் இருள்" என்னும் உவமையால் முனைத்து நிற்காமையே பொருள் எனக் கொண்டதுபோல், இச்செய்யுளில் வரும் "ஒளிமுன் இருள்" என்னும் உவமையால், "தானும் தேயும் அன்றே" என்பதற்கு இல்லாமற் போகும் எனப்பொருள் கொள்ளாமல் வாசனையும் இல்லாமல் சத்திகெட்டு நிற்கும் எனப்பொருள் கொள்ள வேண்டும்.

சித்தியார் சூத்திரம் 10. செய்யும் 6-ல் "எல்லா மலங்களும் பின் காயமொடு மாயும் அன்றே" என்று கூறப்பட்டுள்ளது. இதற்கு, "எல்லா

மலங்களும் உடம்பு நீங்குவதோடு ஒழிந்து போகும்" என்று தானே பொருள் கொள்ள வேண்டும்" சிவஞான சுவாமிகள் அங்ஙனம் பொருள் கொள்ளவில்லை. "மலங்கள்" என்பதற்கு "மலவாதனைகள்" எனப் பொருள் கொண்டு, "ஏனை மல வாதனைகளும் அவ்வுடம்பு மாயுங் காலத்து வேறொரு பற்றின்மையான் அதனோடு மாய்ந்தொழியும்" என உரை செய்திருக்கிறார். சித்தாந்தத்தில் பொருள்கோள் முறைகள் சில உண்டு. "சூன்யம்" என்பதற்கு "இன்மை" என்பது சித்தாந்தப் பொருள் அன்று. "விளங்காமை" என்பதே சித்தாந்தப் பொருளாகும். "அழிதல்" என்பதற்கு "இல்லாது ஒழிதல்" சித்தாந்தப் பொருளாகாது. காரிய நிலைமாறிக் காரண நிலைக்கு வருவதே, "அழிதல்" என்று சொல்லப்படும். எனவே இம்முறைகளையும் மரபுகளையும் அறிந்தே பொருள் செய்ய வேண்டும். "தானும் தேயும் அன்றே" என்பதற்கு வாசனையும் இல்லாமல் மலம் சத்திகெட்டு நிற்கும் என்பதே சித்தாந்தப் பொருள் கோள் முறையாகும்.

இதுகாறும் கூறியவற்றால் அருணந்தி சிவாசாரியர்க்கும் உமாபதி சிவம் கூறியவண்ணம் ஒளிமுன் இருள்போல் முத்தி நிலையிலும் மலம் இல்லாமற் போகாமல் சத்தி கெட்டு நிற்கும் என்பதே கருத்தாதல் தெளிவாகப் புலனாகும். ஆகவே, பெத்தான்மாக்களிடத்தில் "மலம் நிற்பதால் நித்தியம்" என அவர் கூறுவதற்கு, இதற்கு ஏற்றவாறே பொருள் செய்ய வேண்டும் என்பதைக் கூற வேண்டுவதில்லை. இனி அச்செய்யுளை ஆராய்வோம்.

"நெல்லினுக்குத் தவிடுஉமிகள் அநாதியாயே
நெல்லை விட்டு நீங்கும் வகை நின்றநிலை நிகழ்த்தீர்
சொல்லியிடில் துகளற்ற அரிசியின் பால்இல்லை
தொக்கிருந்து மற்றொருநெற் தோன்றிடாவாம்
மெல்ல இவைவிடும் அறவே இவைபோல அணுவை
மேவுமலம் உடல்கன்மம் அநாதிவிட்டே நீங்கும்
நல்லசிவ முத்தியின் கண் பெத்தான்மாவை
நணுகிநிற்கும் ஆதலால் நாசமும் இன்றாமே"

இரத குளிகை பரிசித்த செம்பிலும் களிம்பு தொக்கியிருக்கும் என்பதை நோக்கி வேறு உவமை கூறுவதன் மூலம் அவர்களுக்கு உணர்த்த இச்செய்யுள் எழுந்ததென்றாலும் ஒளிமுன் இருள் உவமையை மறுப்பார் யாரும் இல்லாமையின், அவ்வுவமைக்கு மாறாகாதவாறே இதற்குப் பொருள் கூற வேண்டும்.

(தொடரும்)

உ







குன்றக்குடி

## அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில்

# பங்குனி உத்திரப் பெருந்திருவிழா

திருவள்ளுவராண்டு 2040 பங்குனி 17 முதல் 26 வரை

**30.3.2009 முதல் 8.4.2009 வரை**

| நாள் | நேரம் | நிகழ்ச்சி |
|---|---|---|
| பங்குனி 17 திங்கள் 30.3.2009 | காலை 5.00 மணி | கொடியேற்றம் |
| பங்குனி 21 வெள்ளி 3.4.2009 | மாலை 6–7.15 மணி | வள்ளிநாயகி திருமணம் |
| பங்குனி 22 சனி 4.4.2009 | இரவு 7.30 மணி | ருத்ராட்சக் கேடகம் |
| பங்குனி 23 ஞாயிறு 5.4.2009 | இரவு 8.00 மணி | தங்கரதம் |
| பங்குனி 24 திங்கள் 6.4.2009 | இரவு 8.00 மணி | தெப்பம், வெள்ளிரதம் |
| பங்குனி 25 செவ்வாய் 7.4.2009 | மதியம் 2.30 மணி | திருத்தேர் |
| பங்குனி 26 புதன் 8.4.2009 | பகல் 11.00 மணி | உத்திரம், தீர்த்தத் திருவிழா |

சிவநேசச் செல்வர்கள் அனைவரும் வந்து வழிபட்டு எல்லாப்பேறுகளும் பெற விரும்பும்

திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம்

**பூசை அண்ணாமலைத் தம்பிரான் கட்டளை விசாரணை**

குறிப்பு: மின்விளக்குகளால் ஒப்பனை செய்யப்பெற்ற திருக்கோயில் தெப்பம் கண்டு மகிழத் தக்கது. 10 ஆம் திருநாள் அக்கினிக் காவடி, பறவைக் காவடி, முதலியவை பார்க்கத் தக்கவை. 4,5,6,7,8 ஆம் திருநாட்களில் நாதசுர இன்னிசை நிகழும். நாள்தோறும் திருமுறைப் பாராயணமும், வேதபாராயணமும் நடைபெறும்.

# குறளுக்கு நிகரான நூலில்லை!

(தமிழ்மாமணி. புலவர்.திருக்குறள். **நாவை. சிவம்**)

**எடுப்பு**

குறளுக்கு நிரான நூலேது மில்லை!
குறையாத அறிவுக்கும் இதுதானே எல்லை! (குறளுக்கு)

**தொடுப்பு**

இருளுக்கு ஒளிகாட்டும் விளக்கினைப் போலே
இனம்பேணும் வாழ்வியல் சொல்லுவதாலே (குறளுக்கு)

**முடிப்பு**

திறமான ஒருநூற்றி முப்பத்தி மூன்று
தேனான அதிகாரம் தமிழுக்கே சான்று
அறமாகப் பொருளீட்டி இன்பத்தைக் கொள்ள
அருமையாய் ஈரடியில் முப்பாலைச் சொல்லும் (குறளுக்கு)

உலகெலாம் போற்றிடும் உளப்பாங்கை நாட்டி
ஒருநாளும் மறவாத சிந்தனையைக் கூட்டி
மலைவாழை போலவே சுவைக்கருத்தை அள்ளும்
மாத்தமிழ்ப் புலவோர்கள் உரைகண்டு துள்ளும் (குறளுக்கு)

இலக்கிய இலக்கணம் ஏராளம் உண்டு!
என்றாலும் தமிழுக்குக் குறள்தான்கற்கண்டு!
துலக்கமாய் நம்வழிதாம் குறளாகக் கொள்வோம்
துடிப்பாகக் குறளோதித் துன்பத்தை வெல்வோம்! (குறளுக்கு)

---

# சிந்தனை வட்டம்

பழந்தமிழர் ஆண்டை ஆறுவகைப் பருவங்களாகப் பகுத்தனர்; அவற்றில் முதல் பருவம் இளவேனில் அதற்குரிய மாதங்கள் சித்திரை, வைகாசி. எனவே தமிழாண்டின் தொடக்கமாக சித்திரை முதல் நாளையே பழந்தமிழர் கொண்டிருந்தனர் எனத் தெரிகிறது. தமிழாண்டுகள் எனச் சொல்லப்படும் அறுபதும் தமிழ்ச் சொற்களாய் இல்லாமையால் அவை தமிழாண்டுகள் ஆகா. ஆண்டைக் கணக்கிட, திருவள்ளுவராண்டைக் கொள்ள வேண்டும்.

இல்லை திருவள்ளுவருக்கு ஈடு என்ற தலைப்பிலுள்ள பாக்களில் என்னைக் கவர்ந்த வரிகள் வருமாறு :

"குறட்பேராசான் ஏற்றும் ஒளி நெறிநடந்தோர் மனிதரானார்"
"வாழ்வாங்கு மானிதர்வாழ எழுந்ததுதான் திருக்குறளே!"

புலவர் வீ.செ. கந்தசாமி அவர்களுக்குப் பாராட்டுக்கள்.

தலமரங்களைத் தொகுத்தளித்த புலவர் மரு. பரமகுரு அவர்களுக்குப் பாராட்டுகள்! தலமரங்களில் சில. செடி, கொடி வகைகளும், புல்வகைகளும் இடம் பெற்றிருப்பதை அறிந்தேன்.

– புலவர். ச.மு. விமலானந்தன், திருப்பத்தூர்.

"ஈழத்தில் எரியும் தீயை அணைக்க ஒன்றுபடுவோம்" தலையங்கம் மிகச் சிறப்பாக நெஞ்சைத் தொடும் வகையில் உள்ளது. பேரறிஞர் அண்ணா, புத்தர்பெருமான், நபிகள் நாயகம், இறைவன் கூற்று முதலியன குறிப்பிடத்தக்கன. பாதுகாப்பு வளையம், மரணவளையமாக ஆக்கப்பெற்றுள்ள செய்தி கூறும் தொடர் அருமை.

நம் பரமகுரு அவர்களுக்கு திருப்பூர்த் தமிழ்ச்சங்கம் விருது அளித்துள்ள செய்தியும், வள்ளல் பழ.தரும. ஆறுமுகம் அவர்கள் நண்பர்க்கு ஒரு லட்சம் அளித்துள்ள செய்தியும் பெரும் மகிழ்ச்சியைத் தருகின்றன.

– ஆதீனப் புலவர். க. கதிரேசன், பூவாளூர்.

மெய்ஞ்ஞானத்தைப் பெருக்குவதே மக்கள் சிந்தனையின் முனைப்பான தொண்டாக விளங்கிவருகையில், அதனினும் மேலான மனித நேயத்தை பல கோணங்களில் ஓர் ஆராய்ச்சிக் களமாகத் தோன்றுமாறு விவரிக்கிறது மாசி இதழ் தலையங்கம்!

ஆம்... ஏழு பக்கங்களையும் திரும்பத் திரும்பப் படித்து, இலங்கை வாழ் தமிழரின் அமைதிக்காக இறையருளை விழிநீர் சொரிந்து வேண்ட வைக்கிறது உருக்கமான அருட்சொற்கள்...!

அரசியல்வாதிகளால் கூட இவ்வளவு எளிய நடையில் உணர்த்த இயலாது. இராமாயண - மகாபாரத போர்க்கால நெறிகளையும், சின்னஞ்சிறிய நாடாகிய ஜப்பானின் உயர்ந்த புரட்சி சாதனைகளையும், புத்தர் - ஏசு - நபிகள் - நம் தேசபிதா ஆகிய உதாரண மகா புருஷர்களால் வரலாறுகள் படைத்த நம் கருணை பூமியின் மனித நேய மகத்துவத்தையும் ஓர் குறுங்கையேடு போல விளக்குகிறது!

மாணவ சமுதாயமும், அருள் நெறியை மரபாகக் கொண்டயாவரும், "சூரியன் அஸ்தமிக்காத..." எனத் தொடங்கும் பாராவையும், "நம்முடைய எண்ணமெல்லாம்...." எனத் தொடங்கும் பாராவையும், தனியே எடுத்தெழுதி பாடமாகக் கொண்டு, "இதுவே தமிழரின் மனித நேயக்குரல்" என்று ஓங்கி ஒலித்து இணைந்து தொண்டாற்றுவோம்.

**- கலைமாமணி.நெல்லை. ஆ. சுப்பிரமணியன், உறையூர்.**


## மக்கள் சிந்தனை
### உரிமை, பதிப்பு, அறிக்கை

| | | | |
|---|---|---|---|
| 1. | இதழின் பெயர் | : | **மக்கள் சிந்தனை** |
| 2. | மொழி | : | **தமிழ்** |
| 3. | வெளியீடு | : | **திங்கள் இதழ்** |
| 4. | வெளியீடு இடம் | : | **குன்றக்குடி - 630 206** |
| 5. | ஆசிரியர் உரிமை | : | **மரு. பரமகுரு** திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி |
| 7. | பதிப்பாளர் அச்சகம் | | **பழ. பாண்டித்துரை** சண்முகநாதன் அச்சகம், மேலரத வீதி, குன்றக்குடி. |
| 8. | பதிவு | : | செய்தி இதழ் |

*மேற்கண்ட விவரம் யாவும் உண்மை என்றும், நம்பத் தகுந்தவை என்றும் உறுதி கூறுகிறேன்.*

நாள் : 16-3-2009

**மரு. பரமகுரு**


### திருத்தம்

மாசி மாத இதழில் பக்கம் 12ல் வெளியான தமிழாகரர் தெ. முருகசாமி அவர்களின் கவிதைத்தலைப்பு அருளாலய மும்பை என்பதற்குப் பதிலாக "*அருளாலய மாநாடு*" என்று திருத்திப்படிக்க வேண்டுகிறோம். தவறுக்கு வருந்துகிறோம்.

**- ஆசிரியர்**



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

**குன்றக்குடி - 630 206**

**Phone: 04577 - 264567 Mobile : 94433 64200**

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இயக்குநர்

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின்அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி பற்றவைத்தல் 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் மண்புழு தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.

பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.

குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.




## அருள்நெறி முழக்கம்

ஆசிரியர் :
தவத்திரு குன்றக்குடி அடிகளார்

விலை : 40/-
பக்கங்கள் : 96பக்கங்கள்

**அருள்நெறி பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்







## சமய வாழ்வு

விலை : ரூ. 40/-
பக்கங்கள் : 176 பக்கங்கள்

## காற்றில் வந்த கருத்துமழை

விலை : 70/-
பக்கங்கள் : 176 பக்கங்கள்

ஆசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

**திருமாறன் பதிப்பகம்**
7/8 பீட்டர்ஸ் குடியிருப்ப
இராயப்பேட்டை
சென்னை - 600 014

MAKKAL CHINTHANAI - March 2009 Price Rs. 5-00
Date of Publication 20-03-2009
Register of News Paper for India No. 85913/81 Register No. KKD/04/2009-2011



பெறுநர்

திரு அருள் திரு
ஆதீனகர்த்தர்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி - வழி அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166